REGD. No. TN-MS (C) 244 * ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone, 420212 4 பக்கம் விலை 40 காசு

**நீதி**

நியாயத்தை ஏற்போம். இடுக்கண் களைத் துடைப்போம். நீதியை நிலைநாட்டியே தீருவோம்.

-பேறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்



**ஆட்சி**

ஆட்சி என்பது மக்களின் கூட்டு வாழ்க்கையில் கோணல் ஏற்படாமல் சமன் செய்திடும் வலுவுள்ள, ஆனால் வதைக்காத செயலாற்றும் கண்ணோட்டமாகும்.

- தந்தை பெரியார்

மலர் 5 சென்னை 23—6—1981 செவ்வாய் வெளியூர் 24—6—1981 புதன் இதழ் 244

## அரசு அதிகாரிகளை மிரட்டுவதா?

# கருணாநிதியின் மோசடி அரசியல்

## ப. உ. ச. கடும் கண்டனம்

சென்னை, ஜூன் 23-அரசு செயலாளர்களை அச்சுறுத்தும் வகையில் செயல்பட்டு கருணாநிதி நடத்தும் மோசடி அரசியலுக்கு கழகப் பொதுச்செயலாளர் ப. உ, ச. கடும் கண்டனம் தெரிவித்திருக்கிறார்.

தனது அரசியல் அநாகரிகச் செயலுக்கு பிரதமர் இந்திராவின் பெயரையும் பயன்படுத்தி கருணாநிதி பிளாக்மெயில் செய்வதாகவும். அவர் குற்றம் சாட்டியிருக்கிறார்.

கழகப் பொதுச் செயலாளர் ப.உ.ச. விடுத்துள்ள ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

சரியாகவோ, தவருகவோ தனக்குக் கிடைத்திருக்கும் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி 'பிளாக் மெயில்' செய்யும் நோக்கத்தோடு எதிர்க்கட்சித் தலைவர் தம் குடும்ப ஏட்டின் மூலம் அரசு செயலாளர்களை அச்சுறுத்தும் வகையில் எழுதுவது பெரியதொரு அரசியல் மோசடியாகும்.

இச்செயலை மக்களாட்சி முறையில் நம்பிக்கை உள்ள அனைவரும் வன்மையாகக் கண்டிக்க வேண்டும்.

### அரசியல் அநாகரிகம்

சுயநலத்திற்காக நடத்தப்படும் இந்தச் சூதுக்கு பிரதமரின் பெயரும் பயன்படுத்தப்படுவதாகத் தெரிகிறது. இது வருந்தத்தக்கது,

இத்தகைய அரசியல் அநாகரிகச் செயலில் ஈடுபடுவதற்காக அவர்களாகவே 'நாணி' இத்துடன் நிறுத்துவார்கள் என்று நம்புகிறேன்.

இவ்வாறு ப. உ. ச. தமது அறிக்கையில் கூறியிருக்கிறார்.

## சொன்னதும்-சொல்ல மறந்ததும்

இந்தித் திணிப்பை எந்த நேரத்திலும் தி. மு. க. வரவேற்கிற கட்சியல்ல.

—கருணாநிதி சொன்னது

ஆனல்...இந்திமொழி வளர்ச்சி பற்றி அறிய உலகப் பயணம் போகிற கட்சி

ராணுவத்தில் இந்தி திணிக்கப்படுவதைக்கண்டு கொள்ளாத கட்சி.

காலப்போக்கில் தமிழர்கள் இந்தியை ஏற்றுக் கொள்வார்கள் என்று மத்திய மந்திரியிடம் உத்தரவாதம் கொடுத்த கட்சி.

மும்மொழித் திட்டமே தேவை என்று சட்டசபையில் காங்கிரசார் கூறியபோது, 'உம்' மென்று உட்கார்ந்திருந்த கட்சி.

—சொல்ல மறந்தது

மாநில உரிமைகளை தி. மு. கழகம் எந் நேரத்திலும் விட்டுக் கொடுக்கிற கட்சியல்ல.

— கருணாநிதி சொன்னது

ஆனல்...மாநில அரசை கலைக்க வேண்டும் என்று சொல்கிற கட்சி,

மாநில சட்டசபையை சஸ்பெண்ட் செய்ய வேண்டும் என்று வற்புறுத்துகிற கட்சி.

மாநில அதிகாரங்களை மத்திய அரசின் பட்டியலுக்கு மாற்றுவதை எதிர்க்காத கட்சி.

கலவரப்பகுதி என்ற பெயரில் மாநிலத்தின் ஒரு பகுதியை கையகப்படுத்தும் மத்திய அரசின் தீர்மானத்தை ஆதரிக்கிற கட்சி.

—சொல்ல மறந்தது.

## அரசவைகவிஞர் கண்ணதாசன் 55-வது பிறந்த நாள்

சென்னை, ஜூன் 23- அரசவைக் கவிஞர் கண்ணதாசனுக்கு நாளை (24ம் தேதி) 55-வது பிறந்த நாள் விழா நடக்கிறது.

தனது பிறந்தநாளை அவர் எளிமையாக கொண்டாடுகிறார்.

இவரது பிறந்த நாளையொட்டி நாளை காலை 9 மணிக்கு திருவல்லிக்கேணி பார்த்தசாரதி ஆலயத்தில் விசேஷ பூஜை நடக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

(7-ம் பத்தி தொடர்ச்சி)

ழக அரசு குடிசைப் பகுதி சீரமைப்பு வாரியத்திற்கு ரூ. 150 லட்சம் உதவி அளித்துள்ளது.

81-82 ம் ஆண்டில் ரூ 250 லட்சம் அளிக்கப்பட்டுள்ளது. என்று அந்த அதிகாரி கூறினர்.

### சைதாப்பேட்டை கொலை:

## பட்டதாரி வாலிபரை விரைவில் பிடிப்போம்

### போலீஸ் கமிஷனர் உறுதி

சென்னை ஜூன். 23. சைதாப்பேட்டையில் 75 வயது கோமளவல்லி என்ற மூதாட்டியை கொலை செய்ததாக கூறப்படும் சுரேஷ்பாபு ஒரு பட்டதாரி. இந்தஆசாமியை விரைவில் பிடித்து விடுவோம் என்று போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் இன்று நிருபர்களிடம கூறினர்.

சென்னை சைதாப்பேட்டை சி.ஐ.டி. நகரை சேர்ந்த ரங்கநாதன் என்பவரின் மாமியார் கோமளவல்லி (வயது 75) நேற்று கழுத்து நெரிக்கப்பட்டு பயங்கரமாக கொலை செய்யப்பட்டார். தனது மகள் கல்யாணியின் வீட்டில் அவர் தங்கியிருந்தபோது மற்றவர்கள் வெளியே சென்றிருந்த நேரத்தில் சுரேஷ்பாபு என்கிறவர் அந்த மூதாட்டியை கழுத்தை நெறித்து கொலை செய்ததாகக் கூறப்படுகிறது.

ரங்கநாதனின் வேதுமகள் அருணாவின் கணவன் இந்த சுரேஷ்பாபு (வயது 25) பி.காம் பட்டதாரி, இவர் மனைவியை பிரிந்து தனியாக வாழ்ந்து வந்தார் என்று கூறப்படுகிறது.

சுரேஷ்பாபு தாம்பரத்தைச் சேர்ந்தவர். தகப்பனர் பெயர் குப்புசாமி. சுரேஷ்பாபுவுக்கும் அருணாவுக்கும் 10 மாதங்களுக்கு முன்பு தான் திருமணம் ஆனது,

உடல் நலம் இன்றி இருந்த கோமளவல்லியின் கழுத்தை நெரித்து கொன்று விட்டு அவருடைய காதில் கிடந்த ஒரு பவுன் எடையுள்ள ஒரு ஜோடி கம்மலையும் துணிகள் நிறைந்த பெட்டியையும் எடுத்துக் கொண்டு சுரேஷ்பாபு ஓடிவிட்டதாக போலீஸ் தரப்பில்கூறப்பட்டுள்ளது.

இன்று நிருபர்களுக்கு பேட்டி அளித்த போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் இந்த கொலையைப் பற்றி கூறியதாவது:

கொலை செய்ததாககூறப்படும் சுரேஷ்பாபுவை எப்படியும் விரைவில் பிடித்துவிடுவோம். போலீசாரிடம் இருந்து சுரேஷ்பாபு தப்பிக்கவே முடியாது.

இவ்வாறு போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் கூறினர்.

## சஞ்சய் காந்தி நினைவு நாள்: புதுடெல்லியில் பேரணி

புதுடெல்லி, ஜூன் 23. இளைஞர் காங்கிரஸ் சார்பில் இன்று நாடு முழுவதும் சஞ்சய் காந்தி முதலாவது நினைவு நாள் கொண்டாடப்படுகிறது.

சஞ்சய்காந்தியின் நினைவு நாளையொட்டி இன்று புதுடெல்லி சாந்தி வனத்தில் பேரணி நடைபெற்றது.

பிரதமர் இந்திரா காந்தி இந்தப் பேரணியில் கலந்து கொண்டு பேசினர்.

இளைஞர் காங்கிரசை அவர் பாராட்டினர். சஞ்சய்காந்தியின் நினைவுநாளையொட்டி ரத்த தான முகாம்களை நாடு பூராவும் நடத்தும் சமூக சேவைக்கு பிரதமர் நன்றி தெரிவித்தார்.

தால்கோத்ரா திடலில் நடைபெறும் ரத்த தான முகாமில் இன்று காலை இளைஞர் காங்கிரஸ் தலைவர் குலாம் நபி ஆசாத் பாராளுமன்ற உறுப்பினர் ஜெகதீஷ் டிட்லர் மத்திய சுற்றுலா துணை அமைச்சர் சாந்துலால் சந்திரகார் ஆகியோர் ரத்ததானம் செய்தனர்.

"சஞ்சய் நினைவு நாளையொட்டி நாடு பூராவிலும் 150 ரத்த தான முகாம்களை இளைஞர் காங்கிரஸ் நடத்துகிறது.

## 'ஆப்பிள்' செயற்கை கோளில் கோளாறு: விஞ்ஞானிகள் முயற்சி

ஸ்ரீஹரிகோட்டா, ஜூன் 23—வெற்றிகரமாக பூமியை வலம் வந்து கொண்டிருக்கும் "ஆப்பிள்" செயற்கைக் கோளில் கோளாறு ஏற்பட்டுள்ளது. இதை சரிப்படுத்தி வெற்றி பெறச் செய்ய ஸ்ரீஹரிகோட்டாவில் உள்ள விஞ்ஞானிகள் பெரும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

கடந்த வெள்ளியன்று பிரெஞ்சு கயானாவில் இருந்து விண்வெளியில் செலுத்தப்பட்ட 'ஆப்பிள்' என்னும்செயற்கைக்கோள் வெற்றிகரமாக பூமியை வலம் வந்து கொண்டிருப்பது தெரிந்ததே.

அதன் நிலையற்றசுற்றுத் தடத்தையும் ஸ்ரீ ஹரி கோட்டாவில் இருநதே விஞ்ஞானிகள் மாற்றி அமைத்து ஸ்திரமான சுற்றுத் தடத்தில் பூமியை சுற்றிவர இயங்கச் செய்தனர்.

இப்போது ஆப்பிள் விண்வெளிக் கலத்தில் ஒரு சிறு கோளாறு ஏற்பட்டுள்ளது. விண் கலத்தில் உள்ள இரண்டு சூர்ய ஒளி யந்திரங்களில் ஒன்றுப ழுதடைந்துள்ளதாக விஞ்ஞானிகள கூறினர்

அந்த பழுதடைந்த யந்திரத்தை சரிப்படுத்தி, மீண்டும் தொடர்ந்து "ஆப்பிள்" தனது பயணத்தில் வெற்றிகரமாகத் தொடர்ந்து செயல்பட விஞ்ஞானிகள் தீவிர முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

விண்வெளிக் கலம் ஆப்பிளில் பொருத்தப்பட்டிருக்கும் கடிகாரத்தின் நேரப்படி காலை 6 மணி அளவில இந்த சூர்ய ஒளி யந்திரத்தை சரிப்படுத்த விஞ்ஞானிகள் முயற்சிக்கிறார்கள். இந்த யந்திரம் சரிப்படுத்தப்படும்போது ஆப்பிள விண்வெளிக்கலம் பூமியின் எந்த பாகத்தில்— இருக்கும் என்பதை குறிப்பிட்டுச் சொல்லவில்லை.

## போப்புக்கு காய்ச்சல்

ரோம், ஜூன் 23—துப்பாக்கியால் சுடப்பட்டு சிகிச்சைபெற்றப்பாப் ஆண்டவருக்கு காய்ச்சல் ஏற்பட்டுள்ளது.

துப்பாக்கியால் சுடப்பட்டதைத் தொடர்ந்து அவர் 6 வார காலம் சிகிச்சை பெற்று வீடு திரும்பினர்.

வீடு திரும்பிய பிறகு இப்போது அவருக்குக் காய்ச்சல் கண்டதால மீண்டும் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளார்.

## நீதான்! உனது ஆணவம்தான்!

'இந்தத் திராவிடர் இயக்கத்தை இரண்டாகப் பிளந்தது யார்? அந்தத் துரோகி யார்?

– கருணாநிதி கேள்வி

திரும்பிப்பார் கதாசிரியரே திரும்பிப்பார்!

1972ஆம் ஆண்டை ஐந்தேஐந்து விஞடி திரும்பிப் பார்!

அண்ணாவின் இதயக்கனியைத் தூக்கி எறிந்தாயே...!

அண்ணா கண்ட கழகத்தின் ஆணி வேரை அறுத்தெறிந்தாயே..!

அனைவருக்கும் அருட்கரம் நீட்டி கட்சிக் காரர்களைக் காத்து நின்ற ஆலமரத்தை வெட்டி வீழ்த்தினயே...!

ஆளுகின்ற பொறுப்பிலிருந்த ஆணவம் ஒன்றினல் தானே அந்த இமாலயத் தவறைச்செய்தாய்?

அதனுல்தானே... அனைத்திந்திய அண்ணாதிராவிட முன்னேற்றக்கழகம் பிறந்தது?

திராவிட இயக்கத்தை இரண்டாகப் பிளந்த துரோகி யார் என்பது இப்போதாவது தெரிகிறதா?

நீதான்!உன் ஆணவம்தான்!

### குடிசை மாற்று வாரியம்

## ரூ. 7 கோடி செலவில் 6,500 குடியிருப்புகள் கட்ட திட்டம்

திருச்சி. ஜூன் 23— குடிசைமாற்று வாரியம் இந்த ஆண்டிலும், அடுத்த ஆண்டிலும் சுமார் ரூ. 7 கோடி செலவில் 6,500 குடியிருப்புகளைக் கட்டி முடிக்கும்.

1980 வரை இந்த வாரியம் சுமார் 28 ஆயிரம் குடியிருப்பு கட்டி இருப்பதாகவும் வாரிய அதிகாரி ஒருவர் கூறினர்.

அந்த அதிகாரி கூறிய விவரம் வருமாறு!

குடிசை மாற்று வாரியம் 1980-ம் ஆண்டு வரையில் ரூபாய் 29 கோடி செலவில் 27 ஆயிரகது 783 குடியிருப்புக்களைக்கட்டிமுடித்துள்ளது.

1981-82ம் ஆண்டில் ரூ. 3.24 கோடி செலவில் 3 ஆயிரம் குடியிருப்புக்கள் கட்டி முடிக்கப்படும்.

1982—83-ம் ஆண்டில் ரூ. 3.42 கோடி செலவில் மேலும் 3500 குடியிருப்புகள் கட்டவும் வாரியம் முடிவு செய்துள்ளது.

80 81-ம் ஆண்டில் தமி

(1-ம்பத்தி பாரக்க)

## தொலைபேசி கட்டணம் உயருகிறது

புதுடெல்லி, ஜூன், 24. தொலைபேசிகட்டண விகிதம் இன்றுமுதல் உயர்கிறது. தொலைபேசி வைத்திருப்பவர்களுக்கு 250 கால்களுக்குமேல் பேசப்படும் கால்களுக்கு இதுவரை 30 காசு என்று கணக்கிடப்பட்டது. இனி இது 40 காசாக உயருகிறது.

தொலைபேசி இணைப்புக்கு கட்ட வேண்டிய தொகை ரூ. 5 ஆயிரத்திலிருந்து ரூ 8 ஆயிரமாக உயர்த்தப்பட்டுள்ளது.

இந்த ஆண்டு

# 33 ஆயிரம் பேருக்கு கண்சிகிச்சை அளிக்க கழக அரசு முடிவு

## அமைச்சர் ஹண்டே தகவல்

சென்னை, ஜூன் 23—இந்த ஆண்டு 33 ஆயிரம் பேருக்கு கண்சிகிச்சை அளிக்க அரசு திட்டமிட்டிருக்கிறது. தொண்டு நிறுவனங்கள் அரசோடு ஒத்துழைத்து கண் பார்வை அளிக்கும் பணியில் உதவ வேண்டும் என்று அமைச்சர் ஹண்டே கூறினார்.

தியாகராயநகர்வெங்கட நாராயணா சாலையில் தென் சென்னை அரிமா சங்கத்தின் சார்பில் மருத்துவ மனை ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. இந்தமருத்துவ மனையின் திறப்பு விழா நடந்தது.

காது, மூக்கு, தொண்டை பிரிவை அமைச்சர் ஹண்டே திறந்து வைத்தார். உடல் பரிசோதனை செய்யும் பிரிவை சென்னை மாநகராட்சி ஆணையாளர் யாஸ்மின் அகமதுவும் புற நோயாளிகள் சிகிச்சைப் பிரிவை நடிகை ஜெயசித்ராவும் திறந்து வைத்தனர்

புதிய வார்டை அரிமா சங்க கவர்னர் வாசுதேவ ராவ் திறந்து வைத்தார்.

அமைச்சர் ஹண்டே பேசுகையில்கூறியதாவது: நம்நாட்டில்கண்பார்வை தெரியாது இருப்பவர்களில் 80 சதவிகிதம் பேருக்கு திரும்ப கண் பார்வை கிடைக்கும் நிலை இருக்கிறது. அவர்களுக்கு நாம் உதவி செய்ய வேண்டும்.

### பூவிழுந்து...

தமிழகத்தில் வருடத்திற்கு 40 ஆயிரம் பேர் கண்ணில் பூ விழுந்ததால் கண்பார்வை தெரியாமல் சிகிச்சைக்கு வருகிறார்கள். இதில் 13 ஆயிரம் பேருக்கு தான் நம்மால் சிகிச்சை அளிக்க முடிகிறது.

இதனால் ஒவ்வொரு ஆண்டும் சுமார் 25 ஆயிரம்பேர் கூடிக் கொண்டே போகிறார்கள்.

இந்த ஆண்டு 33 ஆயிரம் பேருக்கு கண் சிகிச்சை அளிக்க அரசுமுடிவுசெய்து உள்ளது.

இந்த சமுதாய நலப் பணியில் தொண்டுள்ளம் கொண்ட சமூக சேவை நிறுவனங்களும் அரசோடு ஒத்துழைத்து தங்கள் பணியை செய்ய வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் ஹண்டே பேசினார்.

---

வீட்டில் புகுந்து

# நகையை அறுத்து ஓடிய திருடன்

சென்னை, ஜூன் 23—வீட்டுக்குள் புகுந்து தனியாக இருந்த ஒரு பெண்ணிடம் நகையைப்பறித்துக்கொண்டு ஓடினான் ஒருவன்.

இதுபற்றிய விவரம் வருமாறு:

சென்னையை அடுத்து உள்ளது வேளச்சேரி. இங்கு வசிப்பவர் சுப்பிரமணியம். இவர் ராணி மோட்டார்ஸ் கம்பெனியில் வேலை பார்க்கிறார்.

இவரது மனைவி வள்ளியம்மாள் வயது 35. நேற்று மாலை இவர் தமது வீட்டில் மாவரைத்துக் கொண்டிருந்தார்.

அப்போது இனம் தெரியாத ஒரு ஆசாமி வீட்டுக்குள் புகுந்து வள்ளியம்மாள் மீது பாய்ந்து, கழுத்தில் கிடந்த 7 சவரன் தங்கச்சங்கிலியை அறுத்துக் கொண்டு தப்பி ஓடிவிட்டான்.

வேளச்சேரி போலீசார் புலன் விசாரித்து வருகின்றனர்.

---

திறந்த கடிதம்:

# ஐஏஎஸ் அதிகாரிகளே வழுக்கைத் தலையர் வலையில்சிக்காதீர்கள்!

அன்புள்ள ஐ. ஏ. எஸ். அதிகாரிகளே!

வழுக்கைத்தலையரைப் பற்றி நீங்கள் நன்கு அறிந்தவர்கள் தான்.

அவரது வண்டவாளங்களைப் பற்றி மற்றவர்களைவிட உங்களுக்கு நன்றாகத் தெரியும்!

ஆட்சியிலிருந்தபோது அவரால் பழிவாங்கப்பட்ட சிக்கல்களில் சிக்கவைத்து சீரழிக்கப்பட்ட-அதிகாரிகளின் எண்ணிக்கையும் உங்களுக்குத் தெரியும்

அப்படியும் தெரியாத-புரியாதவர்கள் இருந்தால் சர்க்காரியா கமிஷன் அறிக்கையை ஒருமுறை படித்துக்கொள்ளுங்கள்,

ஆட்சியிலிருந்தாலும், இல்லாவிட்டாலும் கொள்ளையடிப்பதையே கலை என்று கருதிச் செயல்படும் ஆசாமி இந்த வழுக்கைத் தலை.

இதற்காக அதிகாரிகளை அவர் மிரட்டுவார.

அதிபர்களை பிளாக்மெயில் செய்வார்

இவருக்கு உடந்தையாக இருந்தவர்கள் உருப்பட்டதில்லை.

உதாரணம்-நம்ம 'நாகு'

பாமாயில், பாமாயில் என்று கூப்பாடு போட்டு அவர்களிடமிருந்து அடித்து பையை நிரப்பிக்கொண்டார்.

இப்போது சாராயக் கம்பெனி சாராயக் கம்பெனி என்று சதா கூப்பாடு போட்டு சாராயக் கம்பெனிக்காரர்களிடம் கொள்ளையடிக்கத் திட்டமிட்டுச் செயல்பட்டு வருகிறார்.

அவரது அந்த இழிசெயலுக்கு உங்களைக் கருவியாக்கக் கருதிக் கொண்டிருக்கிறார். அதனால்தான் உங்களை அவ்வப்போது மிரட்டிக் கொண்டிருக்கிறார்.

ஐ. ஏ. எஸ். அதிகாரிகளே, இந்த வழுக்கைத் தலையர் வலையில் சிக்காதீர்கள்.

இங்ஙனம்,

உங்களது நண்பன்

---

இந்தியாவிலேயே முதல் தடவையாக

# கூவத்தில் ஸ்கூட்டர் படகுகள்

சென்னை, ஜூன் 23—இந்தியாவிலேயே சென்னையில் கூவத்தில் ஸ்கூட்டர் படகுகள் விடப்படும்.

சுமார் ஓராண்டு காலமாக மெரினா கடற்கரை அருகே உள்ள கூவம் ஆற்றில் படகு விடப்படாமல் இருந்தது.

இப்போது மீண்டும் படகுப் பயணத்தை படகுகளைப் ஏற்பாடு செய்துள்ளது.

தற்போது கூவத்தில் 14 படகுகள் விடப்பட்டுள்ளன. விரைவில் தண்ணீரில் செல்லக்கூடிய 'ஸ்கூட்டர் படகுகள்' விட ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இத்தகைய படகுகள் விடப்படுவது இந்தியாவிலேயே இதுதான் முதல் தடவை ஆகும்.

---

ஆந்திர நகரசபை தேர்தல்:

# சித்தூர், திருப்பதி கழகத்தோழர்கட்கு வேண்டுகோள்

சித்தூர், ஜூன் 23— சித்தூர், திருப்பதி நகரசபைத் தேர்தலில் போட்டியிட விரும்பும் கழகத் தோழர்களுக்கு ஆந்திர மாநிலகழக அமைப்பாளர் கோவர்த்தனநாத் முக்கிய வேண்டுகோள் விடுத்துள்ளார்.

கோவர்த்தனநாத்வெளியிட்டுள்ள அறிக்கை விவரம் வருமாறு:-

ஆந்திர மாநில நகரசபைத் தேர்தல்கள் வர இருக்கின்றன.

ஆகஸ்ட் 9ம்தேதி தேர்தல் நடக்க இருக்கிறது.

இதற்கு ஜூலை 14,15 தேதிக்குள் வேட்புமனு தாக்கல் செய்யப்பட வேண்டும்.

ஆகவே சித்தூர், திருப்பதி நகரசபைகளுக்கான தேர்தலில் போட்டியிட விரும்பும் கழகத் தோழர்கள் இது குறித்து கழகத்துடன் தொடர்பு கொள்ள வேண்டும்.

என்னுடைய மேற்பார்வையில் மாவட்ட அமைப்பாளர் அண்ணாமலை இந்தப் பணியினைக் கவனிப்பார்.

போட்டியிட விரும்பும் தோழர்கள் மாவட்ட கழக அமைப்பாளர் அண்ணாமலையிடம் தொடர்பு கொள்ள வேண்டும்.

போட்டியிட விரும்புகிறவர்கள் தலைமைக்கழக ஒப்புதல் பெற்று போட்டியிட வேண்டும்.

இவ்வாறு கோவர்த்தனநாத் கூறியுள்ளார்.

---

மத்திய கமிஷன் பற்றி

# கருத்து கூறவில்லை: கேரள நீதிபதி சதாசிவன் விளக்கம்

திருவனந்தபுரம், ஜூன் 23— எரிசாராய பேரம் சம்பந்தமாக மத்திய அரசு கமிஷன் அமைக்கலாமா என்பது பற்றி தான் எந்தவித கருத்தையும் கூறவில்லை என்று கேரள எரிசாராய விசாரணைக் கமிஷன் நீதிபதி சதாசிவன் தெரிவித்துள்ளார்.

எரிசாராய பேரம் சம்பந்தமாக கேரள அரசு ஒரு தனி நபர் கமிஷன் நியமித்துள்ளது. அதற்கு கேரள ஹைகோர்ட்டின் முன்னாள் நீதிபதி சதாசிவன் நீதிபதியாக நியமிக்கப்பட்டுள்ளார். அவர் தற்போது மத்திய அரசால் நியமிக்கப்பட்ட விசாரணைக் கமிஷன் பற்றி தவறான கருத்துதெரிவித்ததாக ஒரு ஆங்கில பத்திரிகையில் செய்தி வெளியிடப்பட்டிருந்தது. அதற்கு அவர் மறுப்பு தெரிவித்து வெளியிட்டுள்ள செய்தியில் கூறியுள்ளதாவது:

எக்சைஸ் என்பது மாநில விவகாரம் என்றும் அதில் மத்திய அரசு கமிஷன் அமைக்கும் வேலை கிடையாதுஎன்றும் நான் கூறியதாக (டெலிபோன் மூலம்) ஒரு ஆங்கில பத்திரிகை செய்திஒன்றை வெளியிட்டுள்ளது. இது முற்றிலும்தவறானதாகும். நான் அவ்வாறு தெரிவிக்கவே இல்லை. நான்கூறியதை (டெலிபோன்மூலம்) அந்த பத்திரிக்கை நிருபர் தவறாக புரிந்து கொண்டிருக்கலாம்என்று நீதிபதி சதாசிவன் தெரிவித்துள்ளார்.

---

# தேனியில் காளிமுத்து பேசுகிறார்

தேனி, ஜூன் 23- வருகிற 28ந்தேதி (ஞாயிறு) இரவு 7 மணிக்கு தேனியில் உள்ள பகவதி அம்மன் திடலில் கழகப் பொதுக்கூட்டம் நடக்கிறது.

கா. காமாட்சி தலைமையிலும், வி. ஆர். ஜெயராமன் எம். எல். ஏ. முன்னிலையிலும் நடக்கிறது.

அமைச்சர் காளிமுத்து சேடப்பட்டி இரா. முத்தையா எம். எல். ஏ., வெ. பாலகுரு, பெ. ராமதாஸ், கூடலூர்ராமசாமி, சையதுகான், செல்வேந்திரன், பொன்னரசு, எஸ். ஜெயமணி, சி. மனுவேல் ராஜா, சி. பாண்டியன், கே. பொன்னல், பி.இளையராசா, வி. தர்மர், நாகரத்தினம், பாலகிருஷ்ணன், ராஜேந்திரன் சின்னச்சாமி, அப்துல்மஜீத் சீனியாபிள்ளை. தங்கசாமி, எஸ். ஆர், சாமி, ஏ. எம். லட்சுமணசாமி, எம். அபிஷேகபாண்டி, வி. தாயுமானவர் ஆகியோர் பேசுகின்றனர்.

---

விழுப்புரம் அருகே

# போலீசை தாக்கிய 5 நக்சலைட் கைது

## போலீஸ் வேன் தாக்கப்பட்டது

விழுப்புரம், ஜூன் 23— விழுப்புரம் சொரப்பூர் அருகே நக்சல்பாரிகளுக்கும் போலீசாருக்கும் இடையேநடந்த மோதலில் 5 நக்சல் பாரிகள் கைது செய்யப்பட்டனர். இம் மோதலில் 4 போலீசார் காயமடைந்தனர். ஒரு போலீஸ் வேன் அடித்து நொறுக்கப் பட்டது.

விழுப்புரம் சொரப்பூர் அருகே நக்சல் பாரிகள் தங்கியிருப்பதாகப் போலீசாருக்கு தகவல் கிடைத்தது. அதையொட்டி போலீஸ்படையினர் அந்த இடத்திற்கு விரைந்து சென்றனர்.

போலீசார் வருவதைப் பார்த்ததும் நக்சல்பாரிகளும், அப்பகுதியைச் சேர்ந்த மக்களும் போலீசார் வந்த வேன்மீது கற்களை வீசி தாக்குதல் நடத்தினர். இதனால் போலீஸ் வேன் சேதமடைந்தது,

திடீர் தாக்குதலை சமாளித்துக் கொண்டு போலீசார் மேலும் முன்னேறி சென்றுதாக்குதல்நடத்திய நக்சல் பாரிகளை வளைத்துப் பிடித்தனர்.

### யார் யார்?

போலீசாரால் கைது செய்யப்பட்ட நக்சல்பாரிகள் விவரம் வருமாறு;

லால்கான் (வயது 28) அயூப்கான் (வயது 22), சந்திரசேகரன் (வயது 28) தர்மலிங்கம் (வயது 20) இதில் தர்மலிங்கம் பி.எஸ்ஸி. பட்டதாரி.

இவர்கள் அனைவரும் தற்போது தலைமறைவாகி இருக்கும் திருவண்ணாமலை கோதண்டராமனுடன் தொடர்பு கொண்டவர்கள் என்று போலீசார் தெரிவித்தனர்.

நக்சல்பாரிகளுக்கும், போலீசாருக்கும் இடையே ஏற்பட்ட மோதலில் ஒரு தலைமைக் காவலர் உட்பட 4 போலீசார் காயமடைந்தனர். இவர்கள் அனைவரும் மருத்துவமனையில்சிகிச்சை பெற்றனர்.

---

# சிறப்பு அரசு வழக்கறிஞராக தேசபந்து

சென்னை, ஜூன் 23—சென்னை உயர்நீதி மன்றத்தின், சிறப்பு நிலை அரசு வழக்கறிஞராக எம். ஜெ. ஆர். தேசபந்துவை அரசு நியமித்துள்ளது. இந்த பதவி புதிதாக ஏற்படுத்தப்பட்டுள்ளது என்று அரசு பத்திரிகை குறிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

---

இந்த ஆண்டில்

# புதிதாக நூறு உயர்நிலைப்பள்ளிகள் திறக்கப்படும்

திருச்சி, ஜூன் 23— தமிழகத்தில் இந்த ஆண்டில் நூறு உயர்நிலைப்பள்ளிகள் திறக்கப் படும் என்று பள்ளிக் கல்வி இயக்குநர் வெங்கடசுப்பிரமணியம் கூறினார்.

திருச்சி வந்த வெங்கடசுப்பிரமணியம் நிருபர்களிடம் கூறியதாவது:

தமிழகத்தில் 2069 உயர் நிலைப்பள்ளிகள் உள்ளன. இந்த ஆண்டு மேலும் 100 பள்ளிகள் துவக்கப்படும்.

நடப்பு கல்வி ஆண்டில் 75 பள்ளிகளை மேல்நிலைப் பள்ளிகளாகஉயர்த்தஅரசு உத்தரவிட்டுள்ளது.

ஏற்கனவே 1344 மேல் நிலைப்பள்ளிகள் உள்ளன.

69 உயர் நிலைப்பள்ளிகளுக்கு தலா ரூ. 1 லட்சம் கட்டிடம் கட்டவும் அரசு அனுமதித்துள்ளது.

துவக்கக் கல்வியின் தரத்தை மேம்படுத்தவும் அரசு ஆலோசித்து வருகிறது.

இவ்வாறு வெங்கடசுப்பிரமணியம் கூறினார்.

---

அமைச்சர் அரங்கநாயகம் அறிவிப்பு

# பெற்றோர்-ஆசிரியர் கழக எதிர்ப்பு ஆசிரியர்கள் மீது கடும் நடவடிக்கை

சென்னை, ஜூன் 23—பள்ளிகளில் பெற்றோர் - ஆசிரியர் கழகங்கள் அமைப்பதற்கு தடையாகஇருக்கும்தலைமைஆசிரியர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும் என்று கல்வி அமைச்சர் அரங்கநாயகம் எச்சரிக்கை விடுத்துள்ளார்.

மாநில பெற்றோர் ஆசிரியர் கழக பொதுக்குழுக் கூட்டம் தலைமைச் செயலக மாநாட்டு மண்டபத்தில் நடைபெற்றது.

கல்வி அமைச்சர் அரங்கநாயகம் இந்தக் கூட்டத்துக்குத்தலைமைவகித்தார்.

பள்ளிக்கல்வி இயக்குனர் டாக்டர் வேங்கடசுப்ரமணியம், அரசுக்கல்வித்துறை, நிதித்துறை ஆகியவற்றின் துணை செயலாளர்கள் பல்வேறு மாவட்டங்களைச் சேர்ந்த பெற்றோர்- ஆசிரியர் கழக அங்கத்தினர்கள்ஆகியோர் இந்தக்கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

கல்வி அமைச்சர் அரங்கநாயகம் பேசுகையில் கூறியதாவது:

தமிழகத்திலுள்ள அனைத்துப் பள்ளிகளிலும் பெற்றோர்-ஆசிரியர் கழகங்கள் அமைக்கப்பட்டுசெயல்பட வேண்டும். கிராமங்களில் பெற்றோர்களும்குறிப்பாக தாய்மார்களும் காட்டும் ஆர்வத்தை இதர இடங்களிலும் ஏற்படுத்த பள்ளி நிர்வாகிகள் முயலவேண்டும். பள்ளிகளில் அமைக்கப்படும் பெற்றோர் ஆசிரியர் கழகங்கள் மாநில கழகத்துடன் இணைக்கப்பட வேண்டும்.

### ஒழுங்கு கட்டுப்பாடு ஏற்பட...

பள்ளிகளில் ஒழுங்கும் கட்டுப்பாடும் வளர பெற்றோர் ஆசிரியர் கழகங்கள் அவசியம்ஏற்படவேண்டும் என்பதை வலியுறுத்த விரும்புகிறேன்.

இப்படிப்பட்ட பெற்றோர் ஆசிரியர் கழகங்கள் அமைவதற்கு ஒரு சில பள்ளிகளில் தலைமை ஆசிரியர்களே தடையாக இருக்கிறார்கள் என்ற புகார்கள் வந்துள்ளன. தடையாக இருக்கும் தலைமை ஆசிரியர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும்.

சாதி, சமயம் ஆகியவற்றிற்கு அப்பாற்பட்ட ஒரு அமைப்பே பெற்றோர் ஆசிரியர் கழகம் என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்து கொள்ள வேண்டும், கழகங்கள் ஏற்படுவதற்கு ஆய்வாளர்களும், பெற்றோர்களும் ஆசிரியர்களும் ஒத்துழைக்க வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

மேல்நிலைப்பள்ளி, பத்தாம் வகுப்பு ஆகிய பொதுத் தேர்வில் 100 சதவிகிதம் தேர்ச்சி காட்டும் பள்ளிகளுக்கு 30 ஆயிரம் ரூபாய்க்குள்ளும் தொழிற் கல்வியை சிறப்பாக செயல் படுத்திய 67 மேல்நிலைபள்ளிகளுக்கு 14 ஆயிரம ரூபாயும் பரிசளிக்கவும் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

---

# சஞ்சய் தபால்தலை

புதுடெல்லி, ஜூன் 23. மறைந்த சஞ்சய்காந்தியின் முதலாவது நினைவுநாளையொட்டி அவரது உருவம் பொறிக்கப்பட்ட விசேஷ தபால்தலை ஒன்றை இந்தியதபால்துறை இன்று வெளியிட்டது.

தபால்தலை பொறித்த கவரை முதன் முதலாக இன்று காலை சஞ்சய் காந்தியின் மனைவி மேனகாவிடம் அகில இந்திய இளைஞர் காங்கிரஸ் தலைவர் குலாம்நபி ஆசாத் வழங்கினார்.

சஞ்சய்காந்தியின்விசேஷ தபால்தலை இன்றுசென்னை அண்ணா சாலை தபால் அலுவலகத்திலும் முதன் முதலாக வெளியிடப்பட்டது.

---

தலைமைக்கழக அறிக்கை எண்:124-81

## செங்கற்பட்டு மாவட்டம் மீஞ்சூர் ஒன்றிய கழகத்தோழர்களுக்கு

செங்கற்பட்டு மாவட்டம் மீஞ்சூர் ஒன்றியத்தைச் சேர்ந்த கலங்கரை விளக்கம் கிளைக்கழகத்தில்

ஆர். எஸ். முனிவேல்

செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். அவர் கழகத்தில் உறுப்பினர் இல்லை.

எனவே அவர் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லாது.

கழக சார்புமன்றத் தோழர்கள் யாரும் அவருடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக்கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்கள் ஒப்புதலுடனும் பொதுச் செயலாளர் திருமிகு ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச். வி. ஹண்டே.
அமைப்புச் செயலாளர்,
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்.

சென்னை-14
23-6-81

---

# திருவில்லிபுத்தூர் காடுகளில் உள்ள அதிசய அணில்களைக் காக்க ஏற்பாடு

மதுரை, ஜூன் 23—சுமார் ஒருஅடி நீளமுள்ள அணில் வகை திருவில்லிப்புத்தூர் காடுகளில் வசிப்பதாக தகவல் கிடைத்துள்ளது.

இந்த அரியவகைஅணில் உலகில் வேறு எந்தப்பகுதியிலும் இல்லை எனக் கூறப்படுகிறது.

மொத்தம் 0 எண்ணிக்கையிலே உள்ள இந்த அணிலைக்காக்கவும், இன அபிவிருத்தி செய்யவும் வன இலாகா முடிவு செய்துள்ளது. இந்த வகை அணில் மிகவும் உயரமான மரங்களில் கூடுகள் கட்டி வாழ்கிறது.

கேரள வன நிறுவனம் இந்த அணில்களின் குணங்களைப் பற்றிஆராயகேட்டுக் கொள்ளப்பட்டுள்ளது.

★ தமிழகத்தில் உணவு நிலை திருப்திகரம்
★ வறட்சிப்பணிகள் சிறப்பாக நடக்கின்றன
★ சட்டம் ஒழுங்கு திருப்திகரம்
★ நிர்வாக யந்திரம் ஸ்தமபிக்கவில்லை

# கருணாநிதிக்கு நாவலர் சூடு

## எரிச்சல், பொறாமையால் குற்றம் சாட்டுவதா?

திருச்சி, ஜூன் 23- எரிச்சல், பொறாமை காரணமாக தி. மு. க. தலைவர் கருணாநிதி குற்றச்சாட்டுகளைச் சொல்கிறார் என்று நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

தமிழகத்தில் நிர்வாகம் ஸ்தம்பித்துவிட்டது என்று கருணாநிதி சொல்வதில் எள்ளளவும் உண்மை கிடையாது என்றும் நாவலர் தெரிவித்தார்.

திருச்சி வந்த நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார்.

நிருபர்கள் கேட்ட கேள்விகளும் நாவலர் அளித்த பதிலும்வருமாறு.

நிருபர்:- தமிழகத்தில் நிர்வாக இயந்திரம் ஸ்தம்பித்துவிட்டது என்று கருணாநிதி கூறி இருக்கிறாரே?

நாவலர்:- கருணாநிதி எதையும் சொல்லக் கூடியவர். ஆனால் மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்று பார்க்கவேண்டும். அவர் என்ன நினைக்கிறார் என்று மக்கள் கருதவில்லை.

நிர்வாகம் ஸ்தம்பித்து விட்டது என்று கருணாநிதி சொல்வதில் எள்ளளவும் உண்மை இல்லை.

### கருணாநிதிக்கு எரிச்சல்-பொறாமை

கருணாநிதிக்கு எரிச்சல் பொறாமை இதன் காரணமாக இப்படிச்சொல்கிறார்.

தமிழக ஆளுநர் சாதிக் அலியே தமிழகத்தில் சட்டம் ஒழுங்கு நிலை திருப்திகரமாகஇருக்கிறது என்று கூறி இருக்கிறார்.

இதைப்போல மத்திய அமைச்சர்களும் கூறிஇருக்கிறார்கள்,

தமிழகத்தில் வறட்சி நிவாரணப் பணிகள் சிறப்பாக நடக்கின்றன என்றும் ஆளுநர் கூறி இருக்கிறார். இவைகள் எல்லாம் அரசு இயந்திரம் சரியாக இயங்கவில்லை என்பதற்கு அறிகுறியா?

அசாமில் நிர்வாகம் ஸ்தம்பித்து விட்டதுஎன்று பிரதமர் இந்திராகாந்தியிடம் கருணாநிதி சொன்னால் அது ஏற்கத்தக்கதாக இருக்கும்.

நிருபர்:- வறட்சி நிவாரணப்பணிகள் எப்படி நடைபெறுகின்றன.

நாவலர்:- தமிழகத்தில் வறட்சி நிவாரணப் பணிகள் சிறப்பாக நடக்கின்றன.

### நியாய விலையில் அரிசி

இப்படிப்பட்ட கடுமையான வறட்சி நிலையில்கூட வெளி மார்க்கெட்டில் அரிசி கிலோ ரூ. 2.60க்குக் கிடைக்கிறது.

ஒரு கோடியே 7 லட்சம் கார்டுகளுக்கு ஒரு கிலோ அரிசி கிலோ ரூ.1.75க்குக் கொடுத்து வருகிறோம்.

மற்ற மாநிலங்களை ஒப்பிடும் போது தமிழகத்தில் அரிசி, சர்க்கரை, எண்ணை விலைகள் உயர்ந்து இருப்பதாகச் சொல்லமுடியாது.

இந்தியாவில் எந்த மாநிலத்திலும் இல்லாத படி ரூ. 2. 50க்கு நல்ல சாப்பாடு தமிழகத்தில் தான் கிடைக்கிறது.

தமிழகத்தில் போதிய அளவு அரிசிகையிருப்பில். இருக்கிறது,

தமிழகத்திற்கு மத்திய அரசு மாதம் 30 ஆயிரம் டன் கோதுமை ஒதுக்கி வருகிறது.

இதை 40 ஆயிரம் டன்னாக உயர்த்தும்படி மத்திய அரசிடம் கோரி வருகிறோம்.

### தொழில் வளர்ச்சி குறைந்ததா?

தொழில் வளர்ச்சியில் கழக அரசு போதிய கவனம் செலுத்தவில்லைஎன்று சொல்வது சரியல்ல.

1967ம் ஆண்டு காங்கிரஸ் ஆட்சி அகன்றபிறகு தமிழகத்திற்கு மத்திய அரசு எந்த விதமான பெரிய அல்லது நடுத்தர ரகத் தொழிலையும் ஒதுக்கவில்லை. எந்தத் தொழிற்சாலையையும் நாங்கள் வேண்டாம் என்று மறுக்கவில்லை.

### நிதிநிலை திருப்தி

நிருபர்: தமிழக அரசு திவாலாகி விட்டதாக கருணாநிதி கூறியிருக்கிறாரே?

நாவலர்: இது முழுக்க முழுக்க உண்மைக்குப் புறம்பானது ஆகும்.

10 மாநிலங்கள் ரிசர்வ் வங்கியிடம் இருந்து ஓவர் டிராப்டாக ரூ, 943கோடி பெற்றுள்ளது.

ஆனால் தமிழ்நாடு இது வரை ரிசர்வ் வங்கியிடம் இருந்து ஓவர் டிராப்ட் பெறவில்லை

இவ்வாறு டாக்டர் நாவலர் கூறினார்.

கர்நாடக சட்டசபையில்:

## தரையில் அமர்ந்து எதிர்க்கட்சிகள் நடத்திய மறியல்

பெங்களூர், ஜூன் 23- ஒத்திவைப்பு தீர்மானத்துக்கு அனுமதி மறுத்ததால் கர்நாடக சட்டசபைக்குள் எதிர்க்கட்சியினர் தரையில் உட்கார்ந்து கொண்டு மறியல் செய்தனர்.

கர்நாடக மாநில பட்ஜெட் கூட்டத் தொடர் நேற்று தொடங்கியது.

பெண்ணை கடத்தியதாக மாநில திட்ட அமைச்சர் சி. எம். இப்ராகிம் மீது போலீசார் வழக்குப் பதிவு செய்து இருப்பது தொடர்பாக சபையின இதர நடவடிக்கைகளை தள்ளிவைத்து விவாதிக்க வேண்டும்என்றுஎதிர்கட்சியினர் ஒரு ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டு வந்தனர்.

அர்ஸ் காங்கிரஸ் கட்சித் தலைவர் தேவராஜ் அர்ஸ உள்பட பல எதிர்க்கட்சி உறுப்பினர்கள் தீர்மானத்தை ஆதரித்துப் பேசினார்கள். அமைச்சர் சி. எம். இப்ராகிம் பதவி விலக வேண்டும் என்று அவர்கள் வலியுறுத்தினர்.

இந்த தீர்மானத்தின் மீது இரண்டரை மணி நேரம் விவாதம் நடந்தது.

### குண்டுராவ் பதில்

விவாதத்துக்கு பதிலளித்து கர்நாடக முதல்வர் குண்டுராவ் பேசினார். இதுவரையில் போலீசில் முதல் தகவல் அறிக்கை (எப். ஐ. ஆர்.) மட்டுமே பதிவு ஆகி இருக்கிறது. எனவேதான் அவரை பதவியை விட்டு விலகும்படி கூறவில்லை. கோர்ட்டில் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்தால் தான் அமைச்சர் மீது நடவடிக்கை எடுப்பது பற்றி பரிசீலிக்கப்படும் என்று அவர் கூறினார்.

### வெளிநடப்பு

முதலமைச்சரின் பதிலுக்கு பின்னர் ஒத்திவைப்புத் தீர்மானத்துக்கு அனுமதி அளிக்க சபாநாயகர் மறுத்து விட்டார். இதற்கு எதிர்ப்புத் தெரிவித்து பாரதீய ஜனதா உறுப்பினர்கள் வெளி நடப்பு செய்தனர்.

### தரையில் உட்கார்ந்து மறியல்

அர்ஸ் காங்கிரஸ், ஜனதா, இந்திய கம்யூனிஸ்டு கட்சி சட்டசபை உறுப்பினர்கள் சபைக்கு உள்ளேயே இருந்து கொண்டு மறியல் செய்தனர். சபாநாயகருக்கு எதிரே தரையில் உட்கார்ந்து கொண்டு எழுந்து போக மறுத்தனர்.

இதனால் சபை நடவடிக்கைகள் பாதிக்கப்பட்டன. சபாநாயகர் சபையை 15 நிமிடங்களுக்கு தள்ளி வைத்தார்.

மீண்டும் சபை கூடியது. அப்போதும் மறியல் நடத்திய எதிர்க் கட்சியினர் அங்கேயே இருந்தனர். இதனால் சபையை மறு நாளைக்கு (இன்று) சபாநாயகர் ஒத்திவைத்தார்.

137-வது வட்டத்தில்

## டி.கே. கபாலி பேசுகிறார்

சென்னை 137-வது வட்டம் சார்பாக ஓராண்டு சாதனை விளக்க பொதுக் கூட்டம் நாளை 24 ந்தேதி மாலை தாமோதரபுரத்தில் கே. ராமசாமி தலைமையில் நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் டி. கே. கபாலி எம்.எல்.ஏ., ஆலடி அருணா புலவர் இந்திரகுமாரி, வண்ணை கோவிந்தன், மயிலை தமிழ்மணி, அமிர்தம், நடராசன், மாணிக்கம், இரா.மூர்த்தி, ராஜன், முகுந்தன், சண்முகம், செல்வராஜ், பாண்டுரங்கன், கணபதி, குமாரவேலு, ஆகியோர் கலந்து கொண்டு பேசுகின்றனர்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029.
Editor:
E. PARASURAMAN

குமாரபாளையத்தில்

## கழகப் பொதுக்கூட்டம்

ஈரோடு, ஜூன் 23— ஈரோடு குமாரபாளையம் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் சார்பாக கழகப் பொதுக்கூட்டம் இம்மாதம் 28-ந் தேதி மாலை குமாரபாளையம் சந்தைப்பேட்டை அண்ணா திடலில் வி. க. முத்து தலைமையில், எஸ். பி. செட்டியார் கே. ஆர். முத்துசாமி ஆகியோர் முன்னிலையில் நடைபெறுகிறது, இக் கூட்டத்தில் அரசு கொறடா திருப்பூர் மணிமாறன் எம்.எல்.ஏ., பி. கண்ணன் சவுண்டப்பன், கிருஷ்ணராஜ் நடராசன், சண்முகசுந்தரம், சுப்பிரமணி, முத்துசாமி, ஏ. சுப்ரமணியம், டி.பி, ராமச்சந்திரன ஆகியோர் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகின்றனர்.

## ராணுவ வீரர்களது குடும்பங்களைக் காப்பதில் இந்தியாவிலேயே முதலிடம்வகிக்கும்தமிழகம்

சென்னை, ஜூன் 23— இறந்த ராணுவ வீரர்களது குடும்பத்தில் இருக்கும் விதவைத் தாய்மார்களது கண்ணீரைத்துடைப்பதில் முதல்வர் புரட்சித் தலைவர் அரசு மற்றுமோர் வரலாற்றைப் படைத்துள்ளது.

இத்திட்டத்தைச்செயல் படுத்தி முடித்ததில் இந்தியாவிலேயே தமிழகம் முதலாவதாகத் திகழ்கிறது.

ராணுவத்தில் பணியாற்றி 1964ம் ஆண்டுக்கு முன்பு ஓய்வு பெற்று இறந்த ராணுவ வீரர்களின் துணைவியருக்கு ஓய்வு ஊதியம் வழங்க ஒரு திட்டம் மேற்கொள்ளப்பட்டது.

இந்ததிட்டத்தை செயல் படுத்தி முடித்ததில் இந்தியத் துணைக் கண்டத்திலேயே தமிழகம் முதலாவதாக திகழ்கிறது.

இந்தத் திட்டத்தின் கீழ் 250 விதவைத் தாய்மார்களுக்கு மாதம் ரூ. 50 வீதம் ஓய்வு ஊதியம் வழங்கப்படுகிறது.

மேலும் ஒவ்வொரு விதவைத் தாய்மார்களின் இரண்டு குழந்தைகளுக்கு மாதந்தோறும் ஒரு குழந்தைக்கு ரூ.10 வீதம் வழங்கப்படுகிறது.

இதன்படி இதுவரை 60 குழந்தைகள் பயன் பெறுகின்றனர்.

## சேத்துப்பட்டில் அமைச்சர் ராஜாமுகமது பேசுகிறார்

சென்னை, ஜூன் 23— சேத்துப்பட்டு 83-வது வட்டம் சார்பாக கழகப் பொதுக்கூட்டம் சம்பத்குமார் தலைமையில், ரவீந்திரன், பார்த்தசாரதி மோகன் ஆகியோர் முன்னிலையில் ஜெகநாதபுரம் பள்ளிக்கூடத் தெருவில் நாளை (24ந்தேதி) மாலை நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில் அமைச்சர் ராஜாமுகமது, சி. வி. ஆடலழகன், வண்ணை கோவிந்தன், ராஜபாண்டியன், மணி, ஜெயகோபி, பழனி மற்றும் பலர்கலந்து கொண்டு பேசுகின்றனர்.

## மறைவு

ஆலந்தூர் 18 வது வட்ட கழகத்தோழர்சாமிகண்ணு கடந்த 21ந தேதி மரணமடைந்தார். இவரது இறுதி ஊர்வலத்தில்வட்ட செயலாளர் கபாலி, ஏழுமலை, இந்திரமோகன் ஆகியோர் கலந்து கொண்டு அஞ்சலி செலுத்தினர்.

## திருமண அழைப்பிதழ்

பேரன்புடையீர், வணக்கம்!

நிகழும் 1981ம ஆண்டு ஜூன் மாதம் 24க்கு சரியான துன்மதி ஆண்டு ஆனி மாதம 10ஆம் தேதி புதன்கிழமை காலை 10 மணிக்கு மேல் 12 மணிகுள நல்நேரத்தில்

| | |
|---|---|
| எனது குமாரத்தி திருநிறைச்செல்வி **M.S.K. ஜெயிலானிபேகம்** | O. K. A. முகமது யாகூப் அவர்களின் திருநிறைச செல்வன் **O.K.A.M. சாகூல் ஹமீது** |

ஆகியோரது திருமணம்

பெரியோர்களால் நிச்சயித்தபடி மாண்புமிகு தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் **எம்.ஜி. ஆர்.** அவர்கள் ஆசியுடன் மாண்புமிகு அமைச்சர் **இராம. வீரப்பன்** அவர்கள் தலைமையில் சென்னை, மயிலாப்பூர் சாந்தோம நெடுஞ்சாலையில் (மாதா கோவில் எதிரில்) உள்ள கம்யூனிட்டி சர்விஸ் சென்டர் திருமண மண்டபத்தில் நடைபெறும் மணவிழாவிற்கு தாங்கள் தங்கள் சுற்றம் சூழ வருகை தந்து மணமக்களை வாழ்த்தியருள வேண்டுகிறேன்.

| | |
|---|---|
| அவ்வண்ணமே கோரும் | தங்கள் அன்புள்ள |
| O. K. A. முகம்மது யாகூப் | M. S. கமால்பாட்சா |
| பாண்டிபஜார், | செயலாளர் |
| தி.நகர், சென்னை-17. | அ.இ. அ.தி.மு.க. 129வது வட்டம், மயிலை, சென்னை-4. |

நிகழ்ச்சி நிரல் :

24-6-81 புதன்கிழமை காலை 10 மணி அளவில்
வரவேற்புரை: மயிலை வே. தமிழ்மணி
விழாத் தலைவர்: மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள்

: வாழ்த்துரை வழங்குவோர் :

மாண்புமிகு அமைச்சர் பெருமக்கள்
கா. காளிமுத்து, எஸ். இராகவானந்தம், சி. பொன்னையன், H. V. ஹண்டே, எஸ். ராசாமுகமது, சு. முத்துசாமி, எஸ்.என். இராசேந்திரன், M.விஜயசாரதி, திருமதி கோமதிசீனிவாசன், புலவர் புலமைப்பித்தன் (மேலவைத் துணைத்தலைவர்), E. மதுசூதனன், கோ பா.அமிர்தலிங்கம் மற்றும் மயிலைப்பகுதி நிர்வாகிகள், வட்ட செயலாளர்கள்.

நன்றியுரை: M. S. கமால்பாட்சா

## கோவைக்கு ரூ. 48 கோடி செலவில் மாஸ்டர் பிளான்

கோவை, ஜூன் 23— கோவை மாநகராட்சி வளர்ச்சிக்கு ரூ. 48 கோடி செலவில் மாஸ்டர் பிளான் ஒன்று தயாரிக்கப்பட்டுள்ளது என்று கோவை மாநகராட்சி தனி அதிகாரி காப்டன் தங்கதுரை நிருபர்களிடம் தெரிவித்தார்.

சிறுவாணி திட்டத்திற்கு ரூ.1.5 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இது 1982-ம் ஆண்டில் முடியும்.

பாதாள சாக்கடை திட்டத்திற்கு ரூ. 6 கோடி செலவிட திட்டமிடப்பட்டுள்ளது.

சாலைகளை மேம்படுத்தவும், 5 சுரங்க நடைபாதைகளும், பேருந்து நிலையம், கடைகள் அமைக்கவும் திட்டமிருப்பதாக தங்கதுரை கூறினார்.

தமிழகத்தில்

# தொழில் பெருகவில்லையா? புள்ளி விவரத்துடன் கே. ஏ. கே. பதில்

கள்ளக்குறிச்சி, ஜூன் 23— கழகம் ஆட்சிப் பொறுப்பு ஏற்கும் முன் தமிழகத்தில் 18 ஆயிரம் சிறு தொழில்களே இருந்தன. கழகம் ஆட்சிப் பொறுப்பேற்ற இந்த நான்கு ஆண்டுகளில் 36 ஆயிரமாக சிறு தொழில்கள் அபிவிருத்தியடைந்துள்ளது என்று அமைச்சர் கே. ஏ. கே. கூறினர்.

நடப்பு ஆண்டில் விழுப்புரத்தில் இரண்டு கோடி ரூபாய் செலவில் பால் பண்ணை ஒன்றை அரசு அமைக்க இருக்கிறது என்றும் அமைச்சர் கே. ஏ. கே. கூறினர்.

தென்னாற்காடு மாவட்டம் சின்னசேலத்தில் தமிழ்நாடு பால்உற்பத்தியாளர்கள் கூட்டுறவு இணையம் 10 லட்சம் ரூபாய் செலவில் கட்டியுள்ள பால் குளிரூட்டும் நிலையத் திறப்பு விழா நடந்தது.

அமைச்சர் கே. ஏ. கே. இந்த பால் குளிரூட்டும் நிலையத்தை திறந்து வைத்தார்.

சட்டமன்ற உறுப்பினர் கலிதீர்த்தான் தலைமை வகித்தார். எஸ்.சிவராமன் எம். எல். ஏ. முன்னிலை வகித்தார், ஆர். ஜெயராமன் வரவேற்ருர்.

தமிழக அரசின் டெல்லி சிறப்புப் பிரதிநிதி முத்துசாமி, பி. தேவராசன் எம். பி., சட்டமன்ற உறுப்பினர்கள் க. ரங்கசாமி, வி. வி. சாமிநாதன், கே. கலியமூர்த்தி ஆகியோரும் பேசினர்.

அமைச்சர் கே. ஏ. கே. பேசுகையில் கூறியதாவது:

இப்போது தென்னாற்காடு மாவட்டம் தவிர 9 மாவட்டங்களில் பால் பண்ணைகள் உள்ளன. நடப்பு ஆண்டில் தென்னாற்காடு மாவட்டம் விழுப்புரத்தில் 2 கோடி ரூபாய் செலவில் பால் பண்ணை ஒன்றை அரசு அமைக்க இருக்கிறது.

தொடர்ந்து எடுத்துக்கொண்ட முயற்சியின் காரணமாக இந்த பின்தங்கிய பகுதியில் பால் குளிரூட்டும் நிலையம் அமைந்துள்ளது.

இதனால் 49 கூட்டுறவு பால் உற்பத்தியாளர் சங்கங்கள் நன்மை அடைகின்றன. இது கூட்டுறவுத் துறைக்கே கிடைத்தமகத்தான வெற்றி என்று சொல்ல வேண்டும்.

இந்த பால்குளிரூட்டும் நிலையத்தில் 10 ஆயிரம் லிட்டர் கொள்முதல் செய்கிருர்கள். மேலும் 30 ஆயிரம் லிட்டர் கொள்முதல் செய்கின்ற அளவுக்கு மாவட்டம் முழுவதும் இந்த திட்டம் ஏற்படுத்தி உள்ளதால் பல ஆயிரம் பேருக்கு வேலை வாய்ப்பு கிடைத்துள்ளது.

### மேலும் 500 கூட்டுறவு சங்கங்கள்

இதுபோன்று 600 கூட்டுறவுச் சங்கங்கள் உள்ளன. மேலும் 500 சங்கங்களை அரசு ஏற்படுத்த இருக்கிறது. விழுப்புரத்தில் இன்னும் 15 நாட்களுக்குள் பால்குளிரூட்டும் நிலையம் ஒன்று திறந்து வைக்கப்படும். இதனால் 30 ஆயிரம் லிட்டர் பால் கொள்முதல் செய்யமுடியும்.

இது போன்று சிதம்பரத்திலும் சேத்தியாதோப்பிலும் சிறிய அளவில் 4 ஆயிரம் லிட்டர் பால் கொள்முதல் செய்கிருர்கள்.

இந்த திட்டத்தினைக் கொண்டு வந்ததின் நோக்கமே இடைத் தரகர்கள் ஒழிய வேண்டும்என்பதும் பால் உற்பத்தி செய்யும் நடுத்தர ஏழைமக்களுக்கு உரிய தொகையும், நிறைந்த வருமானத்தை ஏற்படுத்த வேண்டும் என்பதற்காகவுந்தான்.

### சிறு தொழில்கள் வளர்ச்சி

கழக அரசு பொறுப்பேற்ற பிறகு தொழில் வளம் பெருகவில்லையென சில விவரம் தெரிந்த எதிர்க்கட்சியினர் கூறுகிருர்கள்.

நாங்கள் பொறுப்பேற்ற போது 18 ஆயிரம் சிறு தொழில்கள் தமிழகத்தில் இருந்தன. நான்கு ஆண்டுகளில் 36 ஆயிரம் சிறு தொழில்களை ஏற்படுத்தி உள்ளோம்.

பிற மாநிலங்களை விட தமிழகத்தில் தான் சிறு தொழில்கள் அபிவிருத்தி அடைந்து இருக்கிறது.

முதல்வர் புரட்சித் தலைவரின் விழுமிய நோக்கமே சிறு தொழில் அபிவிருத்தி செய்து வறுமைக் கோட்டின் கீழ் உள்ளவர்களை நன்மை அடையச் செய்வதுதான்.

மக்களுக்கு இன்னும் நன்மைகளை எப்படி செய்வது என்பதுதான் எங்கள் நோக்கம்.

### எங்கள் நோக்கம்

மக்களுக்கு இந்த அரசு மீது நம்பிக்கை உள்ள வரை கழக ஆட்சியே நீடிக்கும். இது உறுதி.

இவ்வாறு அமைச்சர் கே. ஏ. கே. பேசினர்.

ஒன்றிய செயலாளர்கள் ஏ.வி. பச்சையப்பன், டி. மோகன், நகர செயலாளர்கள், ஏ. ரங்கன், கே. முருகேசன், மாவட்டபிரதிநிதி சுப்பராயன், பாலு, துணை செயலாளர் பாலகிருஷ்ணன் மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

ஒன்றிய அவைத்தலைவர் தங்ககுருசாமி நன்றி கூறினர்.